ஜன சக்தி மலர்—3

# வர்க்கப் போராட்டம்



ப. ஜீவானந்தன்.

விலை] [அரையணா.

இதே பதிப்பு ஜீ. வா. ஹல் இருக்கிறது.
இது இந்திய அரசியலுக்கு.

# வர்க்கப் போராட்டம்





ப. ஜீவானந்தன்



விலை] [அரையணா

# வர்க்கப் போராட்டம்

——:o:——

முதலாளியும் தொழிலாளியும் ஒற்றுமையாக வாழ வேண்டும். ஜமீன்தாரும் குடியானவனும் அன்யோன்ய மாக இருக்கவேண்டும். இவர்களுக்கு இடையில் நட்பை யும் சகோதரத்துவத்தையும் வளர்க்கவேண்டும். அவ்வாறு செய்யாமல், ஒன்று பட்டு வாழுகிற மக்களிடையில் வெறுப்பையும் துவேஷத்தையும் சோஷியலிஸம் பரப்பு கின்றதென்பதுதான், சோஷியலிஸத்தின் மீது சுமத்தப் படுகிற ஒரு முக்கியமான ஆட்சேபம்.

"முதலாளிக்கும் தொழிலாளிக்குமிடையில், ஜமீன் தாருக்கும் குடியானவனுக்கும் மத்தியில், உடையவனுக் கும் இல்லாதவனுக்கும் நடுவில், போராட்டத்தைக் கிளப் புகிறவன் சோஷியலிஸ்ட். இவ்வர்க்கத்தார்களுக்குள்ளே கலவரத்தையும் அடிதடியையும் உண்டு பண்ணுகிறவன் சோஷியலிஸ்ட். இம்சையையும், வெறுப்பையும், வர்க்கத் துவேஷத்தையும் தூண்டிவிட்டு, சமூகத்தில் பிரிவினைகளை யும் பிளவுகளையும் உண்டாக்கவும், கொடிய சண்டை சச் சரவுகளால் மனிதவர்க்கத்தின் புனிதமான ரத்தத்தை வெள்ளக்காடாய்ப் பெருக்கவும் முயற்சி செய்கிற பயங்கர மான இருகால் பூச்சாண்டி, சோஷியலிஸ்ட்." இதுதான் சோஷியலிஸ்டுகளைப்பற்றிய முதலாளிகளின் தீர்மானம்.

முதலாளி—தொழிலாளி வர்க்கப்போராட்டமானது, சோஷியலிஸ்டுகளுடைய 'தலைச் சோறு' (மூளை) சிருஷ்டித்த, ஒரு அக்கிரமமான, அதர்மம் நிறைந்த அநியாய சிருஷ்டி மாத்திரமே யென்றும், மற்றப்படி அது யதார்த்த வாழ்க்கையில் இல்லவேயில்லையென்றும் முதலாளிகள் கூறுகிறார்கள். வர்க்கப்போராட்டத்திலிருந்து விடுதலை பெற ஓரே ஒரு வழி, வர்க்கப்போராட்டத்தைப் பிரசாரஞ் செய்து வருகிற கோஷ்டியாரை அல்லது கட்சியாரை உடனே கைது செய்து தண்டிப்பதுதானென்று அவர்கள் அரசாங்கத்துக்கு யோசனை சொல்கிறார்கள். சோஷியலிஸ்டுகள் உலகத்தில் இல்லாமல் ஒழிந்துவிட்டால், வர்க்கப் போராட்டமும் உலகத்தில் இல்லாமல் ஒழிந்து போகுமென்று அவர்கள் சித்தாந்தம் செய்கிறார்கள்.

வர்க்கப் போராட்டத்தின் பலனாக, தொழிலாளர் கிளர்ச்சிகள் நடை பெறுகின்றன; ஆர்ப்பாட்டங்கள் ஏற்படுகின்றன; ஜதாக்கள் புறப்படுகின்றன; வேலை நிறுத்தங்கள் நிகழ்கின்றன. இவைகளையும் ஏன், இவற்றின் ஆதாரமான வர்க்கப் போராட்டத்தையும் முதலாளிகள் சட்ட விரோதமாக்கி விடுகிறார்கள். "நீதியையும் சமாதானத்தையும் காப்பாற்றுங்கள்" என்ற கோஷத்தைக் கிளப்புகிறார்கள். "சட்டத்தையும் ஒழுங்கையும்" காப்பாற்றும் சாக்கில், வர்க்கப்போராட்டத்தில் ஈடுபடும் தொழிலாளிகளையும் கிருஷிகாரர்களையும் (குடியானவர்களையும்) துப்பாக்கியால் சுட்டு வீழ்த்துகிறார்கள்; பாணத்தடிகளால் மண்டைகளைப் பிளந்து ரத்தக் காடாக்குகிறார்கள் (பிசாசுகளின் சமாதானம்!). வர்க்கப் போராட்டத்தின் மூலகாரண

மாயுள்ள, சமூகத்தின் மாறுபாடுகளேயும், நிலைமைகளின் மாற்றங்களையும் ஒரு முறையேனும் கண்ணெடுத்தும் பாராமல், அவர்கள், வர்க்கப்போராட்டமானது சமூகத்தில் நிலை நிற்பதல்லவென்று சாதிக்கிறார்கள். நோயை வேரோடு பிடுங்கி யெறிவதற்குப் பதிலாக, நோயின் வெளித் தோற்றங்களை வஞ்சகச் சூழ்ச்சியால் பொதிந்து வைக்க ஆசைப்படுகிறார்கள். புண்ணை அகழ்ந்து தோண்டி யெறிவதுதான் மனிதத்தன்மை. அதுவன்றி, அதனைப்பொதிந்து மூடி மறைக்க முற்படுவது கபடமும் பலவீனமும் தானே ?

ஆனால், முதலாளிகள் என்னதான முழங்கினாலும்சரி, அவர்களுடைய கூலிப் பண்டிதர்களும் குற்றேவல் பத்திராதிபர்களும் என்னதான் குலைத்த போதிலும் சரி, சமூக வாழ்வில் வர்க்கப் போராட்டம் ஒழுங்காக, முறையாக, நடந்து கொண்டுதானிருக்கிறது. மதுரை மில்களிலும், பொன்மலை ஒர்க்ஷாப்பிலும், நெல்லிக்குப்பம் பாக்டரியிலும், பம்பாயிலுள்ள இருப்புப் பாதைகளிலும், லண்டனிலுள்ள மாட மாளிகை கூட கோபுரங்களின் அடியிலும், பிரான்ஸிலுள்ள துறைமுகங்களிலும், சைனாவிலுள்ள மலைப் பிரதேசங்களிலும், சிக்காகோவிலுள்ள பனி மண்டலங்களிலும், ஆஸ்திரேலியாவிலுள்ள சுரங்கங்களிலும் நகரங்களிலுள்ள சட்ட நிரூபண சபைகளிலும், நாட்டுப்புறங்களிலுள்ள நில புலங்கள் தோட்டந் துரவுகளிலும், யுத்த களத்திலுள்ள கிடங்குகளிலும் ஊரெங்கும், நாடெங்கும், உலகமெங்கும் அல்லும் பகலும் அனுதினமும் வர்க்கப் போராட்டம் நடந்து கொண்டே யிருக்கின்றது. உலகத்

தின் நாலா பாகங்களிலும் நடந்து கொண்டிருக்கிற இந்த வர்க்கப் போராட்டத்தின் வெளித் தோற்றங்கள், இடம், பொருள், ஏவலுக்கு ஏற்ற மாதிரியில் மாறுபடலாம்; வேறுபடலாம். லண்டனில் ஸ்தாபன ரீதியாக (பலமாக ஸ்தாபிக்கப்பட்ட தொழிற் சங்கங்களின் மூலம்) நடந்த வேலை நிறுத்தம் முதல், மலையாளத்தில் எத்தகைய அமைப்புமின்றி பொதுஜன எழுச்சியாலேயே நடந்த மாப்பிள்ளைக் கலகம் வரையில் வர்க்கப் போராட்டம் நானாவித ரூபங்களில் தோன்றி யிருப்பதைச் சரித்திர பூர்வமாக நீங்கள் பார்க்கலாம். ஆனால் எப்படியோ, வர்க்கப் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறதென்பதை மாத்திரம் மறைக்கவோ, மறுக்கவோ முடியாது.

பிரிட்டனில், சில நூற்றாண்டுகளாக முதிர்ச்சி யடைந்திருக்கிற முதலாளித்வத்திற்கும், ஆலைத் தொழிலாளிகள் முதல் சகலவித அடக்கப்பட்ட வர்க்கத்தார்களுக்கும் பரஸ்பரம் — ஒரு வர்க்கத்திற்கொரு வர்க்கம் — இடைவிடாது தொடர்ச்சியாகப் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது. ஜெர்மனியிலும் இத்தாலியாவிலும் வெறி பிடித்த பேயரசாகிய பாஸிஸம் தலைகால் தெரியாமல் பயங்கரமாக ஆட்சி புரிகிறதல்லவா? முதலாளித்வ சர்வாதிகாரம் முகட்டைத் தொட்டு, எதேச்சாதிகாரத் திமிர் வாதம் அட்டகாசம் செய்கிறதல்லவா? அவ்விடங்களில் கூட, மிதமிஞ்சிய அடக்குமுறைகளுக்கிடையிலும், அளவு கடந்த குரூரங்களுக்கிடை யிலும், தொழிலாளிகள் தங்களுடைய வர்க்கப் போராட்டத்தைத் தளர விடாமல் பலம் பெற நடத்தி வருகிறார்கள். நமது இந்திய நாடு பிரிட்

டிஷ் ஏகாதிபத்யத்தின் காலடியில் கிடக்கிறது. உலகத்தில் இன்னும் பல தேசங்கள் பராதீனப்பட்டுக் கிடக்கின்றன. இவ்வாறு அந்நியர்களின்கீழ் அடிமைப்பட்டுக்கிடக்கும் தேசங்களில், வர்க்கப் போராட்டமானது, தேசியப் போராட்டத்திலிருந்து தனித்துப் பிரிக்க முடியாதபடி அவ்வளவு தூரம் பின்னிப் பிணைந்து கிடக்கிறது. கூலியில் காலணு கூட்ட வேண்டுமென்றும், வேலை நேரத்தில் ஐந்து நிமிஷம் குறைக்க வேண்டுமென்றும், குத்தகையும் வாரமும் குறைய வேண்டுமென்றும் வர்க்கப் போராட்டம் நடைபெறுகிறது. இவ்வாறு அவசியப்பட்டு, ஆரம்பிக்கப் படுகிற சின்னஞ் சிறு கிளர்ச்சிகள் அல்லது போராட்டங்கள், முடிவில், பலத்த ஏகாதிபத்யத்தைத் தலைகுப்புறக் கவிழ்த்துவதற்குரிய மகா பயங்கரமான கஷ்ட நிஷ்டூரங்களை விளைக்கிற ஓர் மகத்தான சுதந்தர யுத்தமாக உரு வெடுக்கிறது. இப்படியாக, திக்குத் திசைகளிலெல்லாம், வர்க்கப் போராட்டம் நடந்து கொண்டிருக்கிறது.

இன்றைய சமூக வாழ்வில் காணப்படும் பொருள் தேடும் முறையைச் சிறிது கவனியுங்கள். இரண்டு வழிகளில் சம்பாத்தியம். ஒன்று, எலும்பு முறியத் தொழில் புரிவதற்குப் பிரதி பலன். இரண்டு, எத்தகைய தொழில் செய்யாவிட்டாலும், மற்றவர்கள் தொழில் புரிவதற்கு அவசியமான சாதனங்களை உடைமையாக்கி வைக்கின்ற சொத்துரிமையின் பிரதிபலன். பாக்டரிகளில் அல்லது தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் வேலை செய்வதற்காகக் 'கூலி' வாங்குகிறார்கள். பாக்டரி சொந்தக்காரன், உற்பத்தி சாதனங்களின் மேலுள்ள தனது பாத்யதையைச்

சொல்லி, லாபம் சம்பாதிக்கிறான். பாக்டரி, முதலாளிக்குச் சொந்தமானதாயிருப்பதால், மற்றவர்களுக்கு வேலை கொடுக்கவும், கொடுக்காதிருக்கவும் அவனுக்கு சாத்தியப்படு கிறது. ஒரு வயிற்றுக் கஞ்சிக்காக வேண்டி, பிச்சைக் காசு மாதிரி யெறிகிற சில செம்புத் துட்டுகளுக்காக வேண்டி, பெரும்பாலான மக்களாகிய தொழிலாளர்கள், முதலாளி களின் அடிமைகளாய்ப் போகும்படி நேரிடுகிறது.

ஒரு விஷயத்தை மறவாதீர்கள்! யந்திரங்களால் பணத் தைப் பிரசவிக்க முடியாது. உற்பத்தி சாதனங்களால், ரூபாய், அணா, பைசாவை உற்பத்தி செய்ய இயலாது. முதலாளிகள் தேடும் திரவியத்தில் ஒவ்வொரு சல்லிக் காசும் தொழிலாளிகளின் உடம்பைச் சாறுகப் பிழியும் அரும்பாட்டின் பலனாகும். முதலாளிகளால் கட்டப்படுகிற சுகபோகக் கோட்டைகளின் ஒவ்வொரு அங்குல இடமும், தினந்தோறும் பத்துமணி நேரம் பன்னிரண்டுமணி நேரம் பாடுபட்ட போதிலுங்கூட, பட்டினி கிடந்து வாடி வதங்குகின்ற தங்களுடைய குடும்பங்களை ரக்ஷிக்க முடியாமல் பரதவித்துப் பெருமூச்சு விடுகிற எழை எளிய தொழிலாளி மக்களின் ரத்தத்தால் நிரப்பப் பட்டதாகும். தொழிலாளர்களின் கூலி குறையக் குறைய முதலாளிகளின் லாபம் ஏறிக் கொண்டே போகும். சுய லாபத்தை அதிகரிக்கும் பொருட்டு, தொழிலாளர் களின் கூலியை வெட்டிக் குறைக்க முயற்சி செய்யாத முதலாளியையும், கூலியை வெட்டிக் குறைக்கிற முதலாளி யின் சுரண்டு முறையிலிருந்து விடுதலையடையப் பிரயத் தனப்படாத தொழிலாளியையும் காண்பது துர்லபம். தன்

சௌகரியத்தைக் கவனியாமல் எந்த முதலாளியும் இருக்க மாட்டான்; எந்தத் தொழிலாளியும் இருக்கமாட்டான். நாலணாக் கூலியை நாலரையணாவாகவேனும் அதிகப் படுத்த வேண்டுமென்று விரும்பாத தொழிலாளியையும், இருபதாயிரம் ரூபாய் லாபத்தை இருபத்தையாயிரமாக்க வேண்டுமென்று விரும்பாத முதலாளியையும், எங்கு தேடிப் பார்த்தாலும் கண்டுபிடிக்க முடியாது. இங்கே தான் வர்க்கப் போராட்டம்!

சுரண்டுகிற வர்க்கம்—முதலாளி வர்க்கம்—உற்பத்தி சாதனங்கள் எல்லாவற்றையும், தனி உடைமையாக வைத்துக்கொண்டு, உழைப்பாளிகளின் ரத்தத்தை வியர்வையாகச் சிந்த வைத்து, அதிலிருந்து லாபத்தைக் "கொள்ளை கொள்ளையாக"த் திரட்டப் பேராசை கொள்கிறது. சுரண்டப்படுகிற வர்க்கம்—தொழிலாளி வர்க்கம் பொருள் உற்பத்தி செய்வதற்கு வேண்டிய சாதனங்கள் சொந்தமாயில்லாத காரணத்தால், உழைப்பு சக்தியை விலைக்கு விற்று, ஜீவனம்சம் நடத்துகிறது. இந்த இரண்டு வர்க்கங்களும் அததனுடைய ஸ்தாபனங்களை அமைத்துக் கொண்டிருக்கின்றன. இவைகளுடைய அபிலாஷைகளும் கோரிக்கைகளும் வேறுபட்டுமாத்திரம் இருக்கவில்லை; விரோதப்பட்டுமிருக்கின்றன. அதனால்தான், இவ்விரண்டு வர்க்கத்தார்களும்—முதலாளிகளும் தொழிலாளிகளும்—அவரவர்களுடைய அபிலாஷைகளைப் பூர்த்திசெய்து கொள்வதற்காக, கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்வதற்காக, சுருங்கச் சொன்னால் வர்க்கலாபங்களை ரக்ஷித்துக் கொள்வதற்காக, ஸ்தாபனங்களை அமைத்துப் போராடுகின்றனர்.

யார் எந்த வேதாந்தம் பேசினாலும், தங்களை அடக்கி ஒடுக்கி நசுக்குகிறவர்களிடத்தில், தங்களுடைய சுதந்திரத்தையும் உரிமைகளையும் மிதித்துத் துவைக்கிறவர்களிடத்தில், தங்களுடைய குடும்பத்தைப் பட்டினி போட்டுக் கொல்லுகிறவர்களிடத்தில், பகை—ஒரு பரிசுத்தமான பகை—(பிணங்களை நீக்கி) சுரண்டப்பட்டு நசுக்கப்பட்டுக் கிடக்கிற வர்க்கத்திலுள்ள ஒவ்வொருவருக்கும் ஏற்படாதிருக்க முடியாது. இந்தப்பகை ஒழிய வேண்டுமானால், சுரண்டுதலும் அடக்குதலும் ஒழிய வேண்டும், சுதந்திரத்தைப் பறிப்பது ஒழியவேண்டும், பட்டினியும் வேலை யில்லாத் திண்டாட்டமும் ஒழியவேண்டும். இவைகள் ஒழிய வேண்டுமானால் வர்க்கங்களே இல்லாமல் ஒழிந்து தீர வேண்டும்.

ஒன்றுக் கொன்று விரோதப்பட்டுள்ள இந்த வர்க்கங்களின் அமைப்புகள், பற்பல ரூபங்கள் எடுக்கின்றன. தொழிலாளி முதலாளியை சாக்குவாக்கில் சந்து பொந்துகளில் நையப் புடைப்பதும், குடியானவன் ஜமீன்தாரை குத்திக் குடலைப் பிசுக்கிக் கொல்லுவதும் வர்க்கப் போராட்டத்தின் போக்கில் தாறுமாறும் அநாகரீகமும் கொண்ட ரூபங்கள். தனித்தனியாக ஒரு முதலாளியையோ அல்லது ஒரு ஜமீன்தாரையோ தாக்குவதால் அல்லது கொல்லுவதால் மாத்திரம் தங்களுடைய உரிமைகளையும் பாத்யதைகளையும் பெற முடியாதென்று உணர்கிற பொழுது, சுரண்டப்பட்ட வர்க்கத்தார், சங்கங்களை அமைத்து ஸ்தாபன ரீதியாகத் தங்களுடைய இயக்கத்தை நடத்தத் தொடங்குகிறார்கள். இந்த வர்க்க சங்கங்கள், சுரண்டப்பட்ட வர்க்

கத்தார்க்கு, புரட்சியின் ஆரம்பப் பாடங்களைக் கற்றுக் கொடுக்கும் பள்ளிக்கூடங்களென்று உணர வேண்டும். உயிரும் உணர்ச்சியும், துடிதுடிப்பும் பரபரப்பும் வாய்ந்த சங்கத்தின் அனுபவங்களிலிருந்து, விலை மதிப்பிட முடியாத எத்தனையோ விஷயங்களை அவர்கள் கற்றுக்கொள்ள முடிகிறது. முதலாளித்வத்தின் கீழ் ஒரு திருப்திகர மான நல்வாழ்வு நடத்த முடியவே முடியாதென்று அவர் கள் திட்ட வட்டமாகத் தெரிந்து கொள்கிறார்கள். வர்க் கங்களை அன்யோன்யப்படுத்துவதற்காக எடுத்துக் கொள் ளும் முயற்சி-வேங்கை வரிப்புலியையும் புள்ளிமான் குட் டியையும் ஒரே பாத்திரத்தில் தண்ணீர் குடிக்க வைக்கிற சர்க்கஸ் வித்தை—அபாயகரமானதென்று அவர்கள் சந் தேகமற அறிந்து கொள்கிறார்கள். அதிகக்கூலி பெறு வதற்காகவும், உள்ளகூலியைக் குறைக்காதிருப்பதற்காக வும், இதைப்போல் சாரமற்ற இதரகோரிக்கைகளுக்காக வும் தொழிலாளர்கள் வேலை நிறுத்தத்திற்குத் தயாராகி விடுகிறபொழுது, அவர்களுடைய தலைவர்களுக்கு 144 (தடையுத்தரவு) சன்மானம் அளிப்பதும், அவர்களைக் கும்பல் கும்பலாக, பைத்தியம் பிடித்த நாய்களைச் சுட்டுத் தள்ளுவது போல, சுட்டுக்கொல்லுவதும், அவர்களுடைய மனைவிமார்களையும் சகோதரிகளையும் தாய்மார்களையும் மிருகத்தனமாக அவமானப்படுத்துவதும் ஆகிய எல்லாம் முதலாளித்துவத்தின் கையில், பீரங்கியும் பட்டாளமும், ஜெயிலும் இருப்பதனால்தான், அரசியல் அதிகாரம் இருப் பதனால்தான், நடைபெறுகின்றன வென்ற உண்மையை அவர்கள் கண்டு கொள்கிறார்கள். ஆகவே, முதலாளித் வத்தை வெற்றிகரமாக எதிர்த்து முறியடிக்க வேண்டு

மாயின், முதலாளித்வத்தின் அரசாங்கத்தை (அரசியல் யந்திரத்தை)க்கூட எதிர்க்கவேண்டுமென்ற அரசியல் உணர்ச்சி அவர்களுக்கு ஏற்படுகிறது. "ஒவ்வொரு, வர்க்கப் போராட்டமும் ஒவ்வொரு அரசியல் போராட்டம்" என்று பண்டு காரல் மார்க்ஸ் கூறியது முற்ற முற்ற உண்மையென்று அவர்களுக்கு வெட்டவெளிச்சமாகிறது.

அரசியல் போதம் ஏற்பட்டதும் தொழிலாளர்கள், தங்களுக்குரிய ஒரு அரசியல் கட்சிவேண்டுமென்று மனப்பூர்வமாக உணர்கிறார்கள். அதனால், ஆமைப்பும் அடிவலுவும் சக்தியும் பொருந்திய ஒரு அரசியல் கட்சியை உற்பவிக்கிறார்கள். முதலாளித்துவத்தை, என்றென்றைக்கு மில்லாமலொழிக்க ஆணிவேர் பக்கவேர் சல்லிவேரோடு பிடுங்கியெறியவும், அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றவும் கச்சையை வரிந்து கட்டிக்கொண்டு அவர்கள் புறப்படுகிறார்கள். முதலாளித்துவத்தின் சவக்குழியின் மேல், வர்க்க பேதத்தால் தாறுமாறுகப் பிரிக்கப்படாத, ஒரு பக்கத்தில் அநியாயமான லாபமும் போக போக்கியமும், மறுபக்கத்தில் அமிதமான பட்டினியுமில்லாத, வர்க்க ரகிதமான ஓர் உத்தமமான சமூகத்தை கட்டுவதற்காக அவர்கள் பகீரதப் பிரயத்தனத்தில் இறங்குகிறார்கள்.

வர்க்கப் போராட்டம் இன்றோ நேற்றோ தோன்றியதல்ல. எழுதப்பட்டுக் கிடைத்துள்ள சரித்திரத்தின் ஒவ்வொரு ஏடும், வர்க்க அமைப்புகளையும் அவற்றின் நடவடிக்கைகளையும் பற்றிய கதைகளைத்தான் விவரிக்கின்றது. சமூகத்தில் வர்க்கப் பிரிவுகள் ஏற்பட்ட நாளிலிருந்து, வர்க்க ஸ்தாபனங்களும் வர்க்கப் போராட்டங்களும்

ஏற்பட்டு வருகின்றன. புராதன காலத்து உற்பத்தி சாதனங்கள் விரிவடைந்ததின் பலனாக, ஒரு மனிதன் அவனுக்கு அவசியமானதில் அதிகமான பொருளை உற்பத்தி செய்ய முடியுமென்று வந்த காலத்தில் நிலம் முதலாதி உற்பத்திக்கு வேண்டிய உபகரணங்கள் சிலருடைய தனி உடைமையாகத் தொடங்கியது முதல், அடிமை, ஆண்டை என்ற வர்க்கங்கள் தோன்றிய கால் முதல், வர்க்கப் போராட்டமும் நிலைத்துவிட்டது. சுரண்டுதலும் வர்க்கப் போரும் ஒரே காலத்தில் பிறந்தவை. இங்கிலாந்தில் சார்ல்ஸ் மன்னனுடைய தலை போனதும், பிரான்ஸில் பதினாறுவது லூயி மன்னன் கொல்லப்பட்டதும், ரஷ்யாவில் ஜாராட்சி தகர்ப்பட்டதுமாகிய நிகழ்ச்சிகளின் உண்மையான காரணம் வர்க்கப் போராட்டத்தின் கொள்கையில் அடங்கிக் கிடக்கிறது.

ஆனால், இன்று நடப்பதுபோல், வர்க்கப் போராட்டம் மிகப் பயங்கரமாக நடக்கவேண்டிய அவசியம், முன்பு ஏற்படவில்லை. ஒரு வர்க்கத்தின் கையில் மிதமிஞ்சிய ஏதேச்சாதிகாரம், இலக்கியம், கலை, அரசியல் யந்திரம், கொடுமை, சுகபோகங்கள், சோம்பேறித்தனம்—மற்றொரு வர்க்கத்தின் கையில், பட்டினி, அடிமைத்தனம், அழுகை, நோய் நொடி, அறியாமை, அந்தகாரம்—இத்யாதி சமூகக் கேடுகளுக்கும் கொடுமைகளுக்கும் பூரண உத்தரவாதம் வகிக்கவேண்டியது வர்க்கப் போராட்டமே. சமூகத்தில் வர்க்கப் போராட்டம் நிலைத்து நிற்கிற வரையில் மேற்சொன்ன கொடுமைகளும் குறைகளும் நிலைத்து நிற்கும். இவைகளெல்லாம் தெக்கத் தெளிவாகத் தெரிந்

திருப்பதால், சமூகத்திலுள்ள வர்க்கப் போராட்டம் ஒழிந்து போகவேண்டுமென்று சோஷியலிஸம் உறுதி கொண்டு நிற்கிறது. ஆனால், வர்க்கப் போராட்டத்தை ஒழிப்பதற்கு, வர்க்கங்களையே யில்லாமலொழிப்பதுதான் ஒரே ஒரு வழி. பொருள் உற்பத்திச் சாதனங்களின் மேல் ஆதிக்கம் செலுத்துகிற தனி உடைமை ஒழிக்கப் படவேண்டும். அதாவது "அது அவன் எஸ்டேட், இது இவன் தொழிற்சாலை" என்று தனி மனிதன் பாத்யம் கொண்டாடுகிற பொருளாதாரத் திட்டம் பூண்டற்றுப் போகவேண்டும். அவ்வாறு ஒழிக்கப்பட்டதும், "சக்திக்குக்குத் தக்கபடி உழைத்து, உழைப்புக்குத் தக்கபடி ஊழியம் பெறுகிற" சம்பிரதாயம் பொருளாதார வாழ்வில் அனுஷ்டிக்கப்படவேண்டும். மேற்படி காரியங்களைச் செய்வதுதான், வர்க்கப் போராட்டமில்லாமல் செய்கிற முயற்சியின் முதற்படி. இப்படியாக, வர்க்க பேதமில்லாததும், "மனிதர் உணவை மனிதர் பறிப்பதும்" "மனிதர் நோக மனிதர் பார்ப்பதும்" ஆகிய வழக்கங்களில்லாததுமான—சம சந்தர்ப்பமும் சம உரிமையும் நிறைந்ததுமான—ஓர் உன்னத சமத்வ சுதந்தர சமூகத்தை ஸ்தாபிப்பதுதான் சோஷியலிஸத்தினுடைய உத்தேசம்.

வர்க்கப் பிரிவினைகளையும், வர்க்கங்களின் வேறுபட்ட மாறுபட்ட கோரிக்கைகளின் பலனான வர்க்கப் போராட்டத்தையும், சோஷியலிஸ்டுகள், மற்றவர்களை யெல்லாம் விட, அதிகமாக வெறுக்கவும், அவை என்றும் மீளாதவாறு ஒழிக்க முயற்சிக்கவும், செய்கிறார்கள். ஏனென்

ளுல், பட்டினி, வேலையில்லாத்திண்டாட்டம், சுரண்டுதல் (exploitation), யுத்தம் முதலிய, சமூகத்தைக் கொடிய நாசத்திற்கு இரையாக்கிக் கொண்டிருக்கின்ற சகலவிதக் கேடுகளுக்கும் அஸ்திவாரம் வர்க்கப்போராட்டம் தானென்றும், வர்க்கப்பிரிவினைகள் ஒழிந்தால் மாத்திரமே சமூகத்தில் இன்பமும் எழிலும், செழுமையும் அமைதியும் வளரத் துவங்குமென்றும் சோஷியலிஸ்டுகள் நன்ளுக உணர்ந்திருக்கிருர்கள்.

இந்தக் காரியத்தில், பிரதானமாகப் பங்கு கொள்ள வேண்டியது, சோஷியலிஸ்டுகளின் மிக முக்கியமான கடமை. போராட்டம், முறையாக நடந்து கொண்டிருந்த போதிலும், சிற்சில சமயங்களில், இப்போராட்டத்தில் ஈடுபடுகிற வர்க்கங்களுக்கு, தாங்கள் எந்த லட்சியத்திற்காகப் போராடுகிருேமென்றுகூட உணர முடிகிறதில்லை. ஆகவே, சுரண்டப்பட்டு அடக்கப்பட்டுக் கிடக்கிற வர்க்கத்தார்களை, வர்க்க போத முடையவர்களாகச் செய்ய வேண்டிய வேலை, சோஷியலிஸ்டுகளின் முக்கிய கடமைகளில் ஒன்று. வர்க்கங்களையும் அவற்ருேடுகூட வர்க்கப் போராட்டத்தையும் முழுக்க முழுக்க ஒழித்துக் கட்டுவதற்கு, இந்த வர்க்க போதம் (Class—Consciousness) இன்றியமையாதது. வர்க்க போதத்தோடு கூடிய வர்க்கப் போராட்டத்தை நடத்துகிறவர்களுக்குத்தான், வர்க்கப் பிரிவினைகளை சர்வ சங்காரம் செய்யத்தக்க விதத்தில், இன்றைய சமூக, பொருளாதார, அரசியல் நிலைமைகளைத் தலை கீழாக மாற்றி அமைக்க முடியும்.

---

:: தமிழ்நாடு சோஷியலிஸ்ட் பிரசுராலய வெளியீடுகள் ::

1. சோஷியலிஸ்ட் பாடல்கள்
2. சோஷியலிஸத்தின் சரித்திரம்
3. வர்க்கப் போராட்டம்
4. ரஷ்யப் புரட்சி
5. கிருபாட்கின் இளைஞர்களுக்கு விடுத்த வேண்டுகோள்
6. சோஷியலிஸ்ட் கதைகள்

---

ஸ்டாலின், லெனின், ஜவஹர்லால் நேரு, சுபாஷ் சந்திர போஸ், முத்துராமலிங்கத் தேவர், ஜீவானந்தம் ஆகியோர் படங்களும் விற்பனைக்குத் தயார்.

---

கிடைக்குமிடம் :

**தமிழ்நாடு சோஷியலிஸ்ட் லிட்ரிச்செர் பப்ளிஷிங் ஹவுஸ்,**

270, திருவல்லிக்கேணி ஹைரோடு, சென்னை.

Printed at the Jesu Press, Triplicane, Madras
and Published by Tamilnad Socialist Literature Pu blishing House,
270, Triplicane High Road, Madras.

# "ஜன சக்தி"

(சோஷியலிஸ்ட் வாரப் பத்திரிகை)

ஆசிரியர்

ப. ஜீவானந்தன்

தமிழ் நாட்டில் தெளிவான மார்க்ஸீய வழியில், சோஷியலிஸத்தைப் பற்றி பிரசாரம் செய்து வரும் தமிழ் பத்திரிகை இது ஒன்றே.

சனிக்கிழமை தோறும் வெளி வருகிறது.

வருட சந்தா ரூ. **3-0-0** தனிப் பிரதி **0-1-0**

மானேஜர்

"ஜன சக்தி"

270, திருவல்லிக்கேணி ஹைரோட், சென்னை.